Regd. No TN/MS (C) 244 · ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) · Phone: 420212 · 4 பக்கம் விலை 45 காசு



**முக்கியம்**

உடை மாறுவது முக்கியமல்ல, உள்ளம் மாறுவதும் உயர்ந்த கருத்துக்கள் உள்ளத்தில் பதிவதும் தான் முக்கியம்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**நன்றி**

நன்றி என்பது பயனடைந்தவர்கள் காட்ட வேண்டிய கடமை.

-தந்தை பெரியார்



மலர்: 6 · சென்னை 17-6-82 வியாழன் · வெளியூர் 18-6-82 வெள்ளி · இதழ்: 237

★ மின் உற்பத்தியில் தன்னிறைவு பெற நடவடிக்கை

★ 2 வருடத்தில் 14 ஆயிரம் கிராமங்களுக்கு குடிதண்ணீர்

## தமிழகத்தை வளப்படுத்த கழக அரசின்

# தீவிர திட்டங்கள்

சென்னை, ஜுன் 17-மின்சாரத்துறையில் பிறமாநிலத்தை எதிர்பார்க்காமல் தமிழகத்திலேயே உற்பத்தியை அதிகரித்து தன்னிறைவு பெற புரட்சித்தலைவர் அரசு முடிவு செய்துள்ளது. 14 ஆயிரம் கிராமங்களுக்கு 2 ஆண்டில் குடிநீர் வழங்கவும் திட்டம் தீட்டப்பட்டுள்ளது. இதற்கான ஆலோசனை முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் நடந்தது.

இருபது அம்ச பொருளாதாரத் திட்டங்களை தமிழகத்தில் தீவிரமாகச் செயல்படுத்துவதுகுறித்து தலைமைச் செயலகத்தில் ஆலோசனைக் கூட்டம் நடந்தது.

முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் நடந்த கூட்டத்தில் மின்சார அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், விவசாய அமைச்சர் காளிமுத்து, மக்கள் நல் வாழ்வு அமைச்சர் டாக்டர் அண்டே, உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு மற்றும் அரசு தலைமைச் செயலாளர் திரவியம், இலாகாச் செயலாளர்கள் ஆகியோர் கலந்து கொண்டனர்.

கூட்டத்துக்குப் பின்னர், அரசுத் தலைமைச் செயலாளர் திரவியம் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

மின்சாரத்தில் தன்னிறைவுபெறமின்உற்பத்தியைப்பெருக்கும் வகையில் பல மின் உற்பத்தித் திட்டங்களைப் பெருக்குவது கூடுமான அளவுக்கு மின்சாரத்தை வீணாக்காமல் சேமிப்பது ஆகியவற்றுக்கு தீவிர நடவடிக்கை எடுக்க முடிவு செய்யப்பட்டது என்று தலைமைச் செயலாளர் தெரிவித்தார்.

### அதிக மின்உற்பத்தி: முதல்வர் உத்தரவு

தமிழகத்துக்கு மின்சாரம் வழங்கும் மாநிலம் கூடுதல் மின் கட்டணம் கேட்பதால்தமிழகத்துக்கு பெரும் நிதிச்சுமை ஏற்படுவது குறித்து கூட்டத்தில் பரிசீலிக்கப்பட்டது.

தமிழகத்துக்கு மின்சாரம் வழங்கும் மாநிலம் அதிகவிலை கேட்பதனால் ஏற்படும் நிலைமையை சமாளிக்க, மின்சார உற்பத்தியைப் பெருக்க தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு முதல்வர் புரட்சித் தலைவர் உத்திரவிட்டுள்ளதாக தலைமைச் செயலாளர் திரவியம் கூறினார்.

14 ஆயிரம் கிராமங்களுக்கு குடிநீர் வசதி இல்லை. 2 ஆண்டுகளில்அந்த கிராமங்களுக்கு குடிநீர்வழங்க தீவிர நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறும், இதற்கான நிதி ஒதுக்கப்படும் என்றும் புரட்சித்தலைவர் கூறினார். குடிநீர் வடிகால் வாரியம் இந்த திட்டத்தை விரைவாக நிறைவேற்ற நிர்வாக

(2-ம் பக்கம் பார்க்க)

---

## வீராசாமியை விடுதலைசெய்ய கோரி டிரைவர் குடிபோதையில் கலாட்டா

சென்னை, ஜுன்17—அசிங்கமாக- அவதூறாக எழுதி கைது செய்யப்பட்ட ஆற்காடு வீராசாமியின் டிரைவர் பன்னீர் செல்வம் குடிபோதையில் ரோட்டில் நின்று கலாட்டா செய்ததாக கைது செய்யப்பட்டார்.

வீராசாமியைவிடுதலை செய் என்று கூச்சல் போட்டுபெரம்பூரிலிருந்து திருவேற்காடு செல்லும் பஸ்சில் கல்விசி ரகளை செய்தார். பொதுமக்கள் போலீசுக்கு போன் செய்தனர். டி. பி. சத்திரம் போலீஸ் இன்ஸ்பெக்டர் மாரிமுத்து விரைந்து சென்று பன்னீர் செல்வத்தை கைது செய்தார்.

### ஹீராசந்த் அழைப்பு

-2 ம் பக்கம்

---

முரசொலி

## பொய்ச் செய்திக்கு கழகத்தினர் கண்டனம்

சென்னை, ஜுன் 17—சென்னை எழும்பூர்84-வது வட்டத்தில் உள்ள கழகக் கொடி கம்பம் பலத்த காற்று வீசியதால் சேதமடைந்தது. அதனைப் புதுப்பிக்கும் முயற்சியில் கிளைக் கழக செயலாளர் ஆர். எஸ். வினாயகமும் கழகத் தோழர்களும் ஈடுபட்டுள்ளனர்.

உண்மையை மறைத்து பொய்யை விற்பனையாக்கும் முரசொலி இந்த நிகழ்ச்சியை தவறாக வெளியிட்டுள்ளது. பொய்ச்செய்திக்குமறுப்பு தெரிவித்து மன்னிப்புக் கோராவிடில் முரசொலி மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்று எழும்பூர் தொகுதி செயலாளர் மா. சு. மணி தெரிவித்துள்ளார்.

---

திண்டிவனம் அருகே

## கழகத் தோழர் பயங்கர கொலை: 4 தி.மு.க.வினர் கைது

### தி. மு. க. செயலாளர் தலைமறைவு

திண்டிவனம், ஜுன் 17- திண்டிவனம் தாலுகா சித்தனி கிராமத்தில் கழகத் தோழர் ஏ. ராமச்சந்திரன் தி.மு.க. வினரால் பயங்கரமாக படுகொலை செய்யப்பட்டுள்ளார்.

இந்தப் படுகொலை சம்பந்தமாக திமுகவினர் நால்வர் கைது செய்யப்பட்டுள்ளனர். திமுக செயலாளர் ஒருவர் தலைமறைவாகியுள்ளார்.

திண்டிவனம் தாலுகா சித்தனி கிராமத்தைச் சேர்ந்தவர் ஏ. ராமச்சந்திரன், 40வயதானவர். கழக செயல்மறவர் புரட்சித்தலைவரிடம் பற்றும் பாசமும் கொண்ட அடலேறு.

கழகப் பணிகளில் தீவிரம் காட்டி உழைத்து வந்தார்.

ராமச்சந்திரன் காட்டிய விறுவிறுப்பு சுறுசுறுப்பு, தீவிர உழைப்பு திமுக.வினருக்கு எரிச்சலை உண்டாக்கியது. எப்படியும் ராமச்சந்திரனை சித்தனி கிராமத்தில் இருந்துஒழித்துவிடவேண்டும் என்று தி.மு.க.வினர் தீவிரமாக இருந்ததாக கூறப்படுகிறது.

ராமச்சந்திரன் நேற்று மாரியம்மன் கோவில் அருகே திமு.க.வினராலும், மற்றவர்களாலும் வளைக்கப்பட்டு தாக்கப்பட்டார்.

தி. மு. க. வினர் ராமச்சந்திரனை குத்தினார்கள்.

ராமச்சந்திரனைத் தாக்குவதைப் பார்த்த அவரது சகோதரர் செல்வராஜ் மற்றும் ராமகிருஷ்ணன், ரகுநாதன் ஆகியோர் ராமச்சந்திரனைக் காப்பாற்ற முற்பட்டனர்.

இவர்களுக்கும் காயம் ஏற்பட்டது.

குத்துக்காயம் பட்டு உயிர் ஊசலாடும் நிலையில் ராமச்சந்திரனை மருத்துவமனைக்கு எடுத்துச்சென்றனர்.

ஆனால் மருத்துவமனைக்குச் செல்லும் வழியிலேயே ராமச்சந்திரன் உடலில் இருந்து உயிர் பிரிந்துவிட்டது.

இந்தப் படுகொலை தொடர்பாக சித்தனி கிராமத்தைச் சேர்ந்த திமுகவினர் நால்வர் கைது செய்யப்பட்டனர்.

அய்யனார் வயது 22, அவரது சகோதரர்கள் ராமதாஸ் வயது 22, துளசிராமன் வயது 27 ராஜேந்திரன் வயது 20 ஆகிய நால்வர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

இந்தடுகொலைசம்பந்தமாக மேலும் 12 பேர் தலைமறைவாகி விட்டதாகக் கூறப்படுகிறது.

### போலீஸ் வலைவீச்சு

மயிலம் ஒன்றியம் தி. மு. க. செயலாளர் யாகூப்பும் அதில் ஒருவர். இவர்களை போலீசார் தேடிவருகின்றனர்.

ராமச்சந்திரன் படுகொலை செய்யப்பட்டது பற்றி விசாரணை நடத்த விழுப்புரம் துணை சூப்ரெண்ட் எர்னஸ்ட் விக்ரவாண்டி இன்ஸ்பெக்டர் ஏ. சுப்பிரமணியம் ஆகியோர் கொலை நடந்த இடத்திற்கு விரைந்தனர். தலைமறைவு ஆசாமிகளைப்பிடிக்க போலீசார் வலை வீசியுள்ளனர்.

---

## சாதி சமயத்தின் பேரால் பகை உணர்வை ஏற்படுத்தினால்...

# கடும்நடவடிக்கை

### அமைச்சரவைக்கூட்டத்தில் முடிவு

சென்னை,ஜுன் 17 சாதி சமயத்தின் பேரால் பகை உணர்ச்சியைத் தூண்டுவோர் மீது கடும் நடவடிக்கை எடுப்பது என்றுதமிழக அமைச்சரவைக் கூட்டத்தில் முடிவெடுக்கப்பட்டது.

தமிழ்நாட்டில் கடந்த சில நாட்களாக நடைபெற்று வரும் வகுப்பு கலவரங்கள், சாதி, சமயம் ஆகியவற்றால் ஏற்படும் உட்பூசல்கள்பற்றி தமிழக அமைச்சரவை கூடி இன்று விரிவாக ஆலோசனை நடத்தியது.

முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் கூடிய இந்தக் கூட்டத்தில் அமைச்சர்கள், அரசு தலைமைச் செயலாளர் திரவியம், உள்துறை செயலாளர் டி. வி. வெங்கட்ராமன் மற்றும்அதிகாரிகள்கலந்து கொண்டனர்.

அமைச்சரவைக் கூட்டம் முடிந்த பின்பு அரசு தலைமைச் செயலாளர் திரவியம் நிருபர்களிடம் கூறியதாவது:-

சாதி, சமயம், இனம், வகுப்பு ஆகியவற்றின் பேரால் மக்களிடையே பகை உணர்ச்சியை உண்டாக்கி, உயிருக்கும் உடைமைக்கும், பொதுஅமைதி ஒழுங்குக்கும் ஆபத்து விளைவிக்கும் வகையிலான நடவடிக்கைகளில் ஈடுபடுவோர் மீது சட்டப்படி, கடுமையான நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்என்று முதல்வர் தலைமையில் நடந்த அமைச்சரவைக் கூட்டத்தில் முடிவு எடுக்கப்பட்டது.

தேவைப்பட்டால் தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழும் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

சமீபகாலமாக நடந்த விரும்பத்தகாத சம்பவங்கள் பற்றி முதல்வர் மிகவும் கவலையோடு விசாரித்தார்.

மத்திய அமைச்சர் வெங்கட சுப்பையாவைச் சந்தித்த போது விரும்பத்தகாத சம்பவங்கள் மீது அரசு எடுத்த மேல் நடவடிக்கைகளை எடுத்துக்கூறினார்.

அதைக்கேட்டு மத்திய அமைச்சர் திருப்தி அடைந்தார்.

மத சம்பந்தமான மற்றும் பொதுவான ஊர்வலங்களைத் தடை செய்யும் எண்ணம் இல்லை. ஆனால் உள்ளூர் நிலைமைக்குத் தகுந்தவாறு அங்குள்ள அதிகாரிகள் தேவையான தக்க நடவடிக்கைகளை எடுப்பார்கள்.

பகை உணர்ச்சிகளைத் தூண்டுபவர்கள் யாராக இருந்தாலும் அரசு நடவடிக்கை எடுக்கும்.

இவ்வாறு அரசு தலைமைச் செயலாளர் கூறினார்.

---

## ரயிலில் பெண்ணைத் தள்ளிக் கொலை

சென்னை, ஜுன் 17—சென்னை கோடம்பாக்கம் ரயில் நிலைய கேட் அருகே, மின்சார ரயில் வந்தபோது 30 வயதுபெண் கைக்குழந்தையுடன் ரயிலில் அடிபட்டு இறந்தாள். 3 மாத கைக்குழந்தையும் இறந்தது. ரயில் வந்த போது அந்தப்பெண்ணை யாரோ தள்ளிக் கொலை செய்திருக்கலாம் என்று தெரிகிறது.

---

## கழகத்தின் சக்தியைக் கண்டிட வாரீர்!

திராவிட இயக்க வரலாற்றில், தென்னாற்காடு மாவட்டத்திற்கு தனியான ஒரு இடம் உண்டு; அந்த மாவட்டத்தின் தலைநகராம் கடலூர் தனிச் சிறப்பு பெற்றது.

வரலாற்றாசிரியர்கள் இன்றைய வரலாற்றை, நாளை எழுதப்போவதில் முக்கியமாகக் குறிப்பிடப் போகிற உண்மைகள்.

தமிழகம், அண்ணாவின் பூமி
அண்ணா பூமியின் மண்வளமோ

நம் அருமை புரட்சித்தலைவருடையது.
இதனை மறைக்கவும் முடியாது, மறுக்கவும் இயலாது.

இம்மாவட்ட மண்ணுக்குப் பல வளங்கள் உண்டு; அவைகளில் சில வளங்களைப் பார்த்தாலே இதன் சிறப்பு தெரியும்.

இம்மாவட்டத்தில்தான், அண்ணாமலை அரசர் நிறுவிய அண்ணாமலைப் பல்கலைக் கழகம் இருக்கிறது.

இதனை பேரறிஞர் அண்ணா அவர்கள் திராவிட இயக்க வயலுக்கு உரிய நல்ல நாற்றங்கால்— இதில் செழித்து வளர்ந்திடும் நல்ல நாற்றுகளை நாட்டு திராவிட இயக்க வயலில் எடுத்து நட்டுக்கொள்வேன் என்று கூறினார்.

ஆம், நாட்டிலே, நல்ல விளைச்சலை தந்து கொண்டிருக்கும் நாவலர் இதில் முத்தநாற்று- அதனைத் தொடர்ந்து சொல்ல, நம் புரட்சித் தலைவர் [illegible] அண்ணா அரசு அமைச்சரவையிலுள்ள வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. எஸ். கே. [illegible] கே, இம்மாவட்ட மண்ணுக்கு சொந்த [illegible] ன்துறை அமைச்சர் பண்ருட்டியார், இன்னும் [illegible] எளியவன் போன்ற எத்தனையோ பேர்கள்.

இவர்களின் அறிவு- ஆற்றல்- உழைப்பு இன்று தமிழகத்தை பொன்னகரமாக ஆக்கிடவைத்து சென்று விட்டார் நம் அண்ணன்.

இதன் மூலம் இம்மாவட்டத்தின் மனவளம் நன்கு புலப்படும்.

இதன் மண்வளத்தை குறிப்பிட வேண்டுமானால், தெற்குக்கு போனால் நஞ்சை, வடக்குக்கு வந்தால் புஞ்சை- நெல் வேண்டுமா? உண்டு! மணிலா, முந்திரி முதலியவை தேவையா? இருக்கின்றன.

கனிவளம்—இந்திய உபகண்டமே, கண்டு சிறப்பிப்பது, நெய்வேலி நிலக்கரி—இதனை கருப்புத் தங்கம் என்பார்கள். ஆம் இம்மாவட்டம், கருப்புத் தங்கபூமி—இதில் சந்தேகமில்லை.

-: தில்லை வில்லாளன் :-

இத்தனை வளங்களையும் ஒரு சேரக்கொண்ட இம்மாவட்டத்தை, பேரறிஞர் அண்ணா, கழகங் கண்ட நாளிலிருந்து, சிறப்புமிக்க திராவிட இயக்கக் களமாக ஆக்கிக் கொண்ட வரலாறு, அனைவரும் அறிந்ததே. இம்மாவட்டத்தில், திண்டிவனத்தில் எழுத்துரிமை—பேச்சுரிமை மாநாட்டை முதலில் நடத்தினார்.

தில்லையில் நடந்த கழக மாநாட்டில்தான், மும்முனைப் போராட்ட திட்ட தீர்மானம் நிறைவேறச் செய்தார்.

பேரறிஞர் அண்ணா கால்கள் பாவாத இடமில்லை இம்மாவட்டத்தில். அவரின் இதயங்

(2-ம் பக்கம் பார்க்க)

---

நான்காம் ஆண்டு

## நினைவு அஞ்சலி

தோற்றம்: 10-10-1948 · மறைவு: 17-6-1978

இரா. பொன்மேனி

கொள்கை பிடிப்பும், தளராத உழைப்பும் கொண்ட உன் நினைவுகள் எங்களது நெஞ்சங்களில் நீக்கமற நிறைந்துள்ளது.

உந்தன்

அன்புத்தம்பி இரா. அற்புதமணி B.Com., (16 வது வட்ட மேலமைப்புப் பிரதிநிதி) அனைத்திந்திய அண்ணா தி. மு. க. சென்னை.

அன்புத்தாய் இரா. விஜயலட்சுமி

---

ஜுலை 19,20 கடலூரில் மாநாடு

# நிந்தனையாளர்கள் நெஞ்சம் பதறிட சிந்தனையாளனே சிலிர்த்துபுறப்படு!

## புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றங்களுக்கு வேண்டுகோள்

கடலூர் திருநகரில் நம்முடைய கழக மகாநாடு, பத்து ஆண்டு, கழக வரலாற்றில் கடலூர் மகாநாடு ஒரு புது சரித்திரம் படைக்கிறது!

சேலம், நெல்லை, கோவை, கடலூர் ஆகிய ஒவ்வொன்றும் நம்முடைய மன்றக் கண்மணிகளின் எழுச்சியை எடுத்துக்காட்டும் கண்ணாடி! தேர்தலா, எழுச்சிப் பேரணியா? நாடு வியக்கும் மகாநாடா, எதுவாகயிருந்தாலும் அந்த வெற்றியில் நம்முடைய பங்கு மகத்தானது.

தென்னாற்காடு மாவட்ட கழகச் செயலாளர் திரு. ஹீராசந்த் அவர்களும், நம்முடைய மாவட்ட மன்றச் செயலாளர் திரு. ஜனார்தனன் அவர்களும் மன்றத்தலைவர் திரு. தில்லை முத்து கோவிந்தராசன் அவர்களும் ஏனைய மகாநாட்டு நிர்வாகிகளும் கடலூர் மகாநாடு வெற்றிக்காக கடந்த ஒரு மாத காலமாக சிறப்பாக பணியாற்றிக்கொண்டு இருக்கிறார்கள்.

கடந்த 30-5-82 அன்று விழுப்புரத்தில் நடந்த தென்னாற்காடு மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றம்செயல் வீரர்கள் கூட்டத்தில் முடிவு செய்தபடி சிறப்பான வளைவுகள் ஏற்பாடு செய்கிற எம். ஜி. ஆர். மன்றத்துக்கும், புரட்சித்தலைவரின் அரசு கண்ட சாதனைகளை விளக்கி சிறப்பாக ஏற்பாடு செய்கின்ற அலங்கார வண்டிகளுக்கு, பரிசுகள் வழங்க தலைமை மன்றம் முடிவு எடுத்திருக்கின்றது.

தமிழகத்தில் புரட்சித்தலைவர் கொள்கைக்காக சிற்றெறும்பு போல சுறுசுறுப்புடன் பணியாற்றுகின்ற கூட்டம் நம்முடைய கூட்டம். பொங்கும் கடலாய், புதுப் புனலாய், எங்கும் நாமாக இருக்க கையில் கொடியுடன் புறப்படு கடலூருக்கு! ஒளி மிகுந்த உங்களுடைய திருமுகங் காண கடலூர் காத்திருக்கிறது.

தங்கள் அன்புள்ள

**ஆர். சௌந்திரராசன்,** பொதுச் செயலாளர்,

**பி. முசிறிப்புத்தன்,** தலைவர்

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றம்





# கழகத்தின் சக்தியை கண்டிட...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கவர்ந்தவர்கள் பிறந்த மாவட்டம், அதனால் இம் மாவட்டம், அவரது இதயம் நிறைந்த மாவட்டம்.

அம்மட்டோ? நம் தங்கநிகர் தலைவர் புரட்சித் தலைவர் தன்னை பேரறிஞர் அண்ணாவோடு இணைத்துக் கொண்ட அந்த நாட்களில், முதன்முதலாக தில்லையில் நடந்த கழக மாநாட்டில் கலந்து கலைக் கண்காட்சியைத் திறந்து வைத்தார். இங்கு நடைபெற்ற பொதுக் குழுவில் பொன்னம்பலனார் எனும் பழம்பெரும் திராவிட இயக்கப்பெரியவருடன் வந்து கலந்து மகிழ்ந்தார்.

திராவிட இயக்க அறிவுக் களஞ்சியமாகத் திகழ்ந்த அண்ணாமலை பல்கலைக் கழகத்திற்கு ரூ. 25,000 நன்கொடையளித்து அதன் செனட் அவையில் ஆயுள் உறுப்பினரானதும் குறிப்பிடத் தக்கதே.

அப்பப்பா! பழைய நிகழ்ச்சி என்றாலும் நெஞ்சில் பாகு கலந்திடும் நிகழ்ச்சி. கடலூரில் அந்த நாட்களில் வழக்கறிஞர் இளம்வழுதி முன் நின்று நடத்திய திராவிடர் திருநாளில், நம் புரட்சித்தலைவர், நியூ சினிமா திரையரங்கில் ஆற்றிய சிறப்புரை...... கட்டணம் கொடுத்து கருத்துரை கேட்க வைத்த முதல் காலம் அது!

பேரறிஞர் அண்ணாவுக்கு கார் பரிசளிப்புக்கு ஏற்பாடு செய்திருந்தேன் நான். அதற்கு பெருந் தொகை நிதியும்தந்து, விழாவில் கலந்து காரின் சாவியை, அண்ணாவிடம் நம் புரட்சித்தலைவர் அளித்தது, மாவட்ட இயக்க வரலாற்றில் குறிப்பிட வேண்டிய ஒன்றாகும்.

கழகம், புரட்சித்தலைவர் தலைமையில் இயங்கத் தொடங்கியபிறகு சட்டமன்ற தேர்தலில் வெற்றி சூடியது — அதற்கு பெருந்துணை புரிந்தது இம்மாவட்டம்.

இத்தனைச் சிறப்புகளையும் தன்னுள் அடக்கிய தென்னாற்காடு மாவட்டத்தில் வரும் ஜூன் 19-20ல் கழக முதல் மாநாடு.

இம்மாநாட்டிற்கு, எல்லா மாநாட்டிலும் இருக்கும் சிறப்புகளோடு சிறப்பான சிறப்பு இருக்கிறது; அதனைக்கூறவே இதனை எழுதி உங்களையெல்லாம் அழைக்கிறேன்.

பெரிய பந்தல்—மிகவும் பெரிய பந்தல் — பத்து லட்சம் பேர்கள் வந்தாலும் அமைதியாக மாநாட்டு நிகழ்ச்சிகளைக் கண்டு கேட்டு மகிழலாம்— ஏற்பாடு உண்டு.

நகரம் முழுவதும் வளைவுகள்—விதவிதமான வடிவங்களில் — மின்விளக்குகள் நட்சத்திரங்களை அள்ளித்தெளித்ததுபோல் — இரவு, பகலாகும்! கடலூரில் காணலாம். மாபெரும் ஊர்வலம் — மலைக்கத்தக்க வகையில் இருக்கிறது.

இரண்டு நாட்கள் மாநாடு முதல்நாள் மகளிர் மாநாடு—இரண்டாம் நாள் அரசியல் மாநாடு— கொடியேற்றல் — வரவேற்புரை — துவக்கவுரை— தலைமையுரை—சிறப்புரைகள்— தலைப்புரைகள்— முடிப்புரை—வாழ்த்துரை — இப்படி எல்லா மாநாடுகளிலும் உள்ளபடி, தனித்தனி தலைவர்கள் பெயர்களில் நிகழ்ச்சிகள் உண்டு.

இவை எல்லா மாநாடுகளுக்கும்—நெல்லையாக இருந்தாலும், கடலூராக இருந்தாலும் உள்ள பொதுவான சிறப்புகள்.

நான் சொல்வது, கடலூருக்கே உரிய சிறப்பான சிறப்பு—

இந்திய நாட்டு அரசியலில், மத்தியில் அரசு அமைத்து, காங்கிரசு கட்சி, கண்களை அகல விரித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் மாநிலம், நம்முடையது.

அதில், நம் தன்னேரிலாத தங்கத்தலைவர் புரட்சித்தலைவர் காத்து நிற்கும் சக்தியின் வலிமை பற்றி ஆராய்ச்சிதான் அங்கும், எங்கும், எல்லோராலும் நடைபெறுகிறது.

உலக வரலாற்றிலேயே இல்லாத வகையில், நம் பேரறிஞர் அண்ணா, ஒரு பெரிய சக்தியை உருவாக்கினார். அந்த திராவிட சக்தியை உருவாக்க, அவர் காட்டிய பாசம் புதுமையானது-இந்த பாச முறையால், கட்டிய சக்தியை, அவர் காலத்திற்குப் பிறகு, காத்திட விட்டுச்சென்ற காவலன் தான் நம் கழகத்தலைவர் புரட்சித்தலைவர்.

இந்த சக்தியின் மொத்த வடிவம் இன்றைக்கு நம் புரட்சித்தலைவராக இருக்கிறது.

எங்கெங்குகாணினும் இந்த சக்தி தெரிகிறது— இதற்கு ஒவ்வொரு இடத்திலே ஒரு பெயரிடப்படுகிறது. ஆனால் இத்தனையும் ஒட்டுமொத்தமாக ஒரு வடிவில் அடங்கி விடுகிறது.

கடலூரில், மகளிர் மாநாட்டில், அரசியல் மாநாட்டில், இந்த சக்தியின் வெளி வடிவங்களின் தனித்தனிப்பெயர்களைக் கண்டாலும், கூட்டிப் பெருக்கினால், அந்த பெரிய சக்தி தெரியும்.

இதனை, ஆட்டி அசைத்து, அழித்து விட, உலகத்தில் எந்த சக்தியும் இன்னமும் பிறந்திடவில்லை; இனியும் உருவாகிடப் போவதில்லை; இது உறுதி!

அண்ணன், தான் உருவாக்கி, வளர்த்த சக்தியை, காத்திட விட்டுச் சென்ற தலைவரோ, புரட்சித்தலைவர்.

இந்தத் தலைமையை தனக்குப் பின் உருவாக்கி விட்டே, அவர் கண் மூடினார்.

இந்தத் திராவிட இயக்க சக்தியின் காவலன், புரட்சித்தலைவர், வீரத்தின் மறு உருவம்.

வீரத்திற்கு இலக்கணம் பலபடக் கூறுவர். அத்தனை இலக்கணங்களுக்கும் இலக்கியமாகத் திகழ்பவர் நம் புரட்சித்தலைவர்.

தன்னம்பிக்கைதான் வீரத்தின் அடிப்படை என்றார் எமர்சன். ஆம், தன்னம்பிக்கை அடிப்படையில, இந்த மாபெரும் சக்தியை வளர்த்திடுகிறார்.

இதயங்களைப் பெறுவதிலேதான் இருக்கிறது - எண்ணிக்கை பெருகுவதிலே இல்லை வீரம் என்றார் டினாடன். இதையொட்டியே, இதயங்களைத்தேடி அதிலே தெய்வமென வீற்றிருக்கிறார் நம் புரட்சித் தலைவர்.

அதைப் போல, அவரது இதயமும், வீரத்திற்கு சிம்மாசனமாக விளங்குகிறது.

இவர் தான், அண்ணாவின் வாரிசாக, அவர் விட்டுச் சென்ற திராவிட இயக்க சக்தியின் இன்றைய காவலனாக- அதன் ஒப்பற்ற தலைவனாக விளங்குகிறார்.

ஆம், ஒவ்வொரு தலைமைக்கும் ஒரு தனிச் சிறப்பு உண்டல்லவா? புரட்சித்தலைவரின் தலைமைக்கு உள்ள சிறப்பே, வெகுகாலத்திற்கு முன்பே, இ. இ. மார்சோஸ் என்ற அறிஞன் எடுத்துக் கூறிவிட்டான்.

தானே சிந்தித்து, தனித்து முடிவெடுத்து, தனித்து நடவடிக்கை எடுத்து, தனித்து ஏற்றுக் கொள்பவனே தலைவன்.

Leadership is the otherside of the coin of loneliness and he who is a leader must always act alone, and acting alone, accept everything alone.

இப்படி வலிமை மிக்க தனித் தன்மை கொண்ட புரட்சித் தலைவர் தலைமையைத் தந்துவிட்டு மறைந்தார் அந்தப் பேரறிஞர் அண்ணா.

இந்தத் தலைமை எதையும் ஆழ்ந்து சிந்தித்து, தனக்குத் தெரியவேண்டியவற்றை தெரிந்து, தான் தெரிந்திருக்கிறோம் என்பதையும் தெரிந்து, எதிரிகளுக்கும், தாம் எதையும் தெரிந்தே செயல்படுபடுகிறோம் என்று தெரிவித்திடும் தலைமை. ஆம், புரட்சித் தலைவர் இப்படித்தான் செயல்படுகிறார். அதனால், அண்ணன் விட்டுச் சென்ற திராவிட சக்தியை காத்து வளர்த்து வருகிறார்.

இந்த நிலையை மிக அழகாக விளக்கியிருக்கிறார் சி. பி. ரண்டால்.

The leader must know, must know that he knows, and must be able to make it abundantly clear to those about him that he knows

ஆகவே, உங்களை அழைக்கிறோம்.

கடலூரில் கூடிட வாரீர்!

பேரறிஞர் அண்ணா பெற்றெடுத்த திராவிட இயக்க சக்தியை இன்று நம் அண்ணாவின் இதயக்கனியாம் புரட்சித்தலைவர் காத்து நிற்கும் சக்தியை — அதனைக் கூறுபோட்டு வேறுபடுத்தி பகை கக்கியும் அசைக்க முடியாது அழிக்க முடியாது நாளும் நாளும் வலுவாகவும், பொலிவாகவும் வளர்ந்து நிற்கும் சக்தியைக் கண்டிட வாரீர் — அந்த சக்தியின் ஒரு அங்கம் நாங்கள் என்று உறுதிபடுத்திட திரண்டு வாரீர்!

## தீவிரத் திட்டங்கள்...

(1-ம் பக்க தொடர்ச்சி)

அமைப்பிலும் மற்ற வகைகளிலும் தேவையான மாறுதல்களை செய்து திட்டத்தை தீவிரப்படுத்த வேண்டும் என்ற முக்கிய முடிவும் இக்கூட்டத்தில் எடுக்கப்பட்டது.

கிராமப்புறங்களில் மகப்பேறு சிகிச்சைக்கு உதவும் தாய்மார்களுக்குப் பயிற்சி அளிக்கும் திட்டத்தை மேலும் அதிகரிக்கவேண்டும். இன்னமும் 20 ஆயிரம் முதல் 30 ஆயிரம் பெண்களுக்கு கிராமப்புறங்களில் மகப்பேறு சிகிச்சைக்கான பயிற்சி அளிக்கவேண்டியுள்ளது. ஆண்டு ஒன்றுக்கு 5 ஆயிரம் பேர் வீதம்இவர்களுக்கு பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற இன்னொரு முடிவும் இக்கூட்டத்தில் மேற்கொள்ளப் பட்டது.

ஏற்கெனவே 20ஆயிரம் பெண்களுக்கு மகப்பேறு உதவியாளர் பயிற்சி அளிக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தில் வானம் பார்த்த (மழையை மட்டுமே எதிர்நோக்கியுள்ள) சாகுபடி நிலமாக உள்ள 5 சதவீதம் மானாவாரி நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதியை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும் என்பது இக்கூட்டத்தில் எடுக்கப் பட்ட மற்றொரு முக்கிய முடிவாகும்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029. Editor: E. PARASURAMAN.

கடலூர் கழக மாநாட்டு ஊர்வலத்தில்

# யானை-குதிரை-கரகம் சிறப்பு அம்சங்கள்: ஹீராசந்த் அழைப்பு

கடலூர், ஜூன் 17- கடலூர் கழக மாநாட்டில் யானை, குதிரை, கரகம், இன்னிசை நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. புரட்சித்தலைவர் ஊர்வலத்தைப் பார்வையிடுகிறார். கழகத் தோழர்கள் அணிதிரண்டு வருமாறு ஹீராசந்த் எம். பி. அழைப்பு விடுத்துள்ளார்.

கடலூர் கழகமாநாட்டு வரவேற்புக்குழுத்தலைவர் ஹீராசந்த் எம். பி. ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

தென்னாற்காடுமாவட்ட முதல் மாநாடு வரும் 19 20ந்தேதிகளில் நடைபெற இருக்கிறது.

19ந்தேதியன்று காலை 9மணிக்கு யானைகளும் குதிரைகளும், மோட்டார் சைக்கிள் வீரர்களும் முன்னே வர அமைச்சர்களும் முன்னணித்தலைவர்கள் வரும் அலங்கார ஊர்திகளும் அதைத் தொடர்ந்து மன்ற மறவர்கள் மாணவர்கள், மகளிர் அணியினர் தொண்டர்படையினர் தொழிலாளர், விவசாயிகள் ஆயிரக்கணக்கான பேருந்துகளிலும் டிராக்டர்களிலும் சைக்கிள்களிலும் மாபெரும் அணி திரண்டு வருகிறார்கள்.

### தமிழ் கலைகள் அணிவகுப்பு

ஊர்வலத்தில் சிலம்பாட்டம், கரகம், மயிலாட்டம், கலைத் கூத்து ஆகியவையுடன் இன்னிசையோடு புதுப்புனல் போல் அணிவகுத்து வருகின்றனர்.

ஆற்றல் மறவர்களின் அணிவகுப்பை இதய தெய்வம் முதல்வர் புரட்சித்தலைவர் பார்வையிடுகிறார்.

19-ந்தேதி மாலை மகளிர் மாநாடு நடைபெறுகிறது.

20-ந்தேதி அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தலைமையில் அரசியல் மாநாடு நடைபெறுகிறது.

இரு தினங்களிலும் மாநாட்டில் முதல்வர் புரட்சித்தலைவர் கலந்து கொள்கிறார். அனைவரும் அணி திரண்டு வருமாறு வேண்டுகிறேன்.

இவ்வாறு ஹீராசந்த் எம். பி. கூறியுள்ளார்.

## மிசோரம் எம். எல். ஏ. சுட்டுக்கொலை

ஷில்லாங், ஜூன் 17— மிசோரத்தில் எம். எல். ஏ. ஒருவர் சுட்டுக் கொல்லப்பட்டுள்ளார். இவரது பெயர் ஜாடிங்கா. இவர் ஆளும் மக்கள் மாநாட்டுக்கட்சி உறுப்பினர்.

லுங்னங் என்ற கிராமத்தில் அவர் தங்கி இருந்தபோது சுட்டுக் கொல்லப்பட்டார்.



தமிழ்நாடு அரசு

நெடுஞ்சாலை மற்றும் ஊரகப் பணித்துறை.

(கருப்புச்சாலை அபிவிருத்தித் திட்டம்)

பொன்னகர், திருச்சிராப்பள்ளி-1

## ஒப்பந்த அறிவிப்பு

எண்: 9-82 நாள்: 8-6-1982

தமிழ்நாடு அரசு ஆளுநருக்காகவும், அவரது சார்பாகவும் கண்காணிப்புப் பொறியாளர் (நெ) கரும்புசாலை அபிவிருத்தித் திட்டம், பொன்னகர், திருச்சிராப்பள்ளி 620 001 அவர்களால் எண் சி, 162, 9வது கிராஸ் தெரு, பொன்னகர் திருச்சிராப்பள்ளி 620 001ல் உள்ள அவர்களது அலுவலகத்தில் கீழ்க்கண்ட வேலைக்கான அரக்கு முத்திரையிட்ட ஒப்பந்தங்கள் (ஷெட்யூல்டு டெண்டர்) 7-7 82 புதன் கிழமை அன்று பிற்பகல் 3.00 மணிவரையில் [அலுவலகக் கடிகாரப்படி] பெற்றுக்கொள்ளப்படும். இந்த ஒப்பந்தங்கள் கண்காணிப்புப் பொறியாளர் [நெடுஞ்சாலை] கரும்புச்சாலை அபிவிருத்தி திட்டம் பொன்னகர், திருச்சிராப்பள்ளி-620 001 அவர்களால் 7-7-1982 அன்று பிற்பகல் 3.15 மணியளவில் திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | வேலையின் மதிப்பீடு | முன் வைப்புத் தொகை | ஒப்பந்தப் படிவங்கள் கிடைக்குமிடம் | நெடுஞ்சாலைத் துறை ஒப்பந்தக்காரர் தகுதி |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1. | கடலூர் கரும்புச்சாலை அபிவிருத்தி திட்டம், கோட்டம், இ. ஐ. டி. பேரி லிமிடெட் நெல்லிக்குப்பம் | | | | |
| | முதல் அழைப்பு | | | | |
| | சென்னை, கும்பகோணம் தஞ்சாவூர் சாலையில் கி.மீ. 180—10ல் பிரிந்து செல்லும்சாலையில் கி. மீ. 8/6ல் நாயடன் ஓடையின் குறுக்கே மேல் மட்டப்பாலம் கட்டுதல். | ரூ 7,99,549 | ரூ 8000 | கோட்டப் பொறியாளர் (நெ) 24, இராமதாஸ்நாயுடு தெரு, கடலூர். | முதல் வகுப்பு 'ஏ' பணவரம்பு ரூ. 8.00 லட்சத்திற்கு மேல்) |

ஒப்பந்த அறிவிப்புப் பற்றிய விபரங்கள், குறிப்பிட்ட பட்டியல்களும் அதற்கான வரைபடங்களும், கோட்டப் பொறியாளர் (நெ) கரும்புச்சாலை அபிவிருத்தித் திட்டம் 24, இராமதாஸ் நாயுடு தெரு, கடலூர்—1 அவர்களிடமிருந்து ஒரு செட்டுக்கு ரூ. 104.20 (ரூபாய் நூற்று நான்கும் பைசா இருபது மட்டும விற்பனை வரி உட்பட (திருப்பித்தரப்பட மாட்டாது) செலுத்தி எழுத்து மூலமாக விண்ணப்பித்து எல்லா அலுவலக நாட்களிலும் அலுவலக நேரத்தில் 22 6-1982 முதல் 6-7-1982 வரை பெற்றுக்கொள்ளலாம். வங்கி உத்திரவாத பத்திரங்கள் முன்வைப்புத் தொகை பிணை வைப்புத் தொகையாகப் பெற்றுக் கொள்ளப்படமாட்டாது.

கண்காணிப்புப் பொறியாளருக்காக (நெ)

கரும்புச்சாலை வளர்ச்சி வட்டம், திருச்சி—1

DIPR—28647-82-11-maa

ஜூன் 19, 20 கடலூரில் மாநாடு

# கண்ணின்மணியே, கழகமறவனேகடலூர்புறப்படு! அண்ணன்புகழைஅவனிக்கு[illegible]ர்த்திடச்செயல்படு!

# ஜப்பானுக்குத் தோல் உடைகள் ஏற்றுமதி: கே.ஏ.கே. ஆலோசனை

டோக்கியோ, ஜூன் 17. ஜப்பானுக்குத் தோல் ஆடைகள் தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்வதற்கான சாத்தியங்கள் பற்றி ஜப்பானில் அமைச்சர் கே.ஏ.கே. ஆலோசித்தார்.

தமிழக ஊரகத் தொழில் அமைச்சர் கே. ஏ. கே. ஜப்பானில், தோல் தொழில் சங்கத்தினருடன் ஆலோசனை நடத்தினார்.

பதனவேலை பூர்த்தியான தோல் மற்றும் தோல் ஆடைகள் முதலியவற்றை தமிழகத்திலிருந்து ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்வதற்கான சாத்தியங்களை ஆலோசித்தார். இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் தோல் அளவு மற்றும் தரம் போன்றவை குறித்து ஜப்பான் தோல் தொழில் சங்கத்தினர் கருத்துக் கூறினார்கள்.

இதுபற்றி இந்தியா திரும்பியதும் மத்திய அரசுடன் இப்பிரச்சினைகள் குறித்து ஆலோசித்து முடிவு எடுப்பதாக அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

மின் அணு பொருள் உற்பத்தி நிறுவனங்களான மத்சுசிதா, மற்றும் மருதாகா ஆகியவற்றைப் பார்வையிட்டார்.

டோஸ் என்ற இரும்புத் தொழிற்சாலை இந்தியாவிலிருந்து தோல் இறக்குமதிசெய்து தோல் பொருள்களைச் செய்யும் நோசகி என்ற நிறுவனம ஆகியவற்றை அமைச்சர் கே. ஏ. கே. சென்று பார்த்தார்.

நேற்று அவர் கொரியா நாட்டுக்குப் புறப்பட்டார்.

## தொழுநோயைத் தடுக்கும் புதிய மருந்து: இந்திய விஞ்ஞானிகள் சாதனை

புதுடெல்லி, ஜூன் 17. தொழுநோயை அறவே ஒழித்துக் கட்டும் புதிய மருந்துகளை இந்திய விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.

இந்த இரண்டு வகையான மருந்துகளையும் கால்நடைகளுக்குக் கொடுத்து சோதனை செய்ததில் நல்ல வெற்றி கிடைத்திருக்கிறது.

இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் குழு பொது இயக்குனர் டாக்டர் வி. ராமலிங்கசாமி புதுடெல்லியில் நிருபர்களிடம் பேசுகையில் இத்தகவலைத் தெரிவித்தார்.

முதல் கட்டமாக இந்த மருந்து மருத்துவமனைகளுக்கு அனுப்பத் தயாராக இருக்கிறது. மருத்துவ நிபுணர்கள் நீண்ட நாட்களாக ஆராய்ச்சி செய்து மருந்துகளைக் கண்டுபிடித்துள்ளனர் என்றும் அவர் கூறினார்.

தொழுநோயால் நோயாளிகள் உடல் ஊனம் அடைவதைத் தடுக்கும் மருந்துகளையும் நிபுணர்கள் கண்டுபிடித்துள்ளனர் என்றும் டாக்டர் ராமலிங்கம் கூறினார்.

## மாணவிகளுக்கு பொன்னப்பா உதவித்தொகை

சென்னை, ஜூன் 17— மறைவெய்திய வனச்சரகர் எம். ஜே. பொன்னப்பா என்பவரின் மனைவி வனத்துறையில் பணியாற்றும் இரு வனச்சரகர்களின் பெண்களுக்கு அறிவியல் பட்டப்படிப்பிற்கு உதவித்தொகை வழங்குவதற்காக வனத்துறைக்கு ரூ. 14,000 வழங்கியுள்ளார்.

"தமிழ் நாடு வனத்துறை நன்கொடை நிதி" என்ற கணக்கில் வங்கியில்வைப்புத்தொகையாக வைக்கப்பட்டுள்து இத்தொகையின் மூலம் கிடைக்கும் வட்டியைக் கொண்டு ஒவ்வோர் ஆண்டும் பி. எஸ்ஸி. பட்டப்படிப்பில் அதிக மதிப்பெண்கள் பெற்று முதல் இரண்டாம் வரிசையில் இடம் பெறும் இரண்டு பெண்களுக்கு உதவித் தொகை வழங்க அரசு திட்டமிட்டுள்ளது.

அவர்கள் மூன்று ஆண்டு படிப்பை முடிக்கும் வரையில் இந்த உதவித்தொகை வழங்கப்படும். பட்டப்படிப்பு மூன்றாண்டுகளானதால் ஒவ்வொரு ஆண்டும் ஆறு பெண்களுக்கு இந்த உதவித்தொகை கிடைக்கும். இந்த உதவித் தொகைக்கென தேர்ந்தெடுக்கப்படும் ஒவ்வொரு பெண்களுக்கும் ஆண்டொன்றுக்கு ரூ. 540- வழங்கப்படும். அந்த வனச்சரகர் மூன்றாண்டு அறிவியல் பட்டப்படிப்பின் காலம் முடிவதற்குள் இறந்து விட்டாளோ அல்லது ஓய்வு பெற்றாலோ அப்படிப்பு முடியும் வரையில்உதவித் தொகை தொடர்ந்து வழங்கப்படும்.

சின்ன சேலம்

## சுப்பிரமணியம் குழந்தைக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பெயர் சூட்டினார்

சென்னை ஜூன் 17— சின்ன சேலம் கழக சட்டமன்ற முன்னாள் உறுப்பினர் மா. சுப்பிரமணியத்தின் பெண் குழந்தைக்கு முதல்வர் புரட்சித் தலைவர் அன்புமொழி என்று பெயர்சூட்டினார்.

## விண்வெளி ஆராய்ச்சிக்கு ரூ. 400 கோடி: மத்திய அரசு அனுமதி

புதுடெல்லி ஜூன் 17— விண்வெளி ஆராய்ச்சியின் கீழ் 3 மிகப்பெரிய விண்வெளித் திட்டங்களுக்கு மத்திய அரசு சுமார் 400 கோடி ரூபாய் ஒதுக்கீடு செய்ய அனுமதி வழங்கியிருக்கிறது.

இந்தியாவின் வளங்களைக்கண்டறிந்து தகவல் அளிப்பதற்கான செயற்கைக் கோளை உருவாக்கும் திட்டம்— 150 கிலோ எடையுள்ள செயற்கைக் கோள்களை விண்வெளியில் செலுத்த ராக்கெட்டை உருவாக்கும் திட்டம், அடுத்த கட்டமாக அயிரம் கிலோ எடையுள்ள செயற்கைக் கோள்களை செலுத்தும் பி. எஸ். எல். வி. ரக ராக்கெட்டுகளை உருவாக்கும் திட்டம் ஆகிய மூன்று திட்டங்களுக்கும் மத்திய அரசு ஒப்புதல் அளித்துள்ளது.

இந்தச் செயற்கைக் கோள் மூலம் பெறப்படும் தகவல்கள், விவசாயம், நீர்வளம், வனவளம், நீரியல், புவியியல் ஆழ்கடல், கடலோர ஆய்வு ஆகிய துறைகளுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

(5-ம் பத்தி தொடர்ச்சி)

1962 ஆம் ஆண்டில் இருந்து ஒரே சீராக இருந்து வருகிறது. விலைவாசி ஏற்றம் என்ற பிரச்சினையே ரஷ்யாவில் எழவில்லை.

ரஷ்ய விலைவாசி பற்றிய குழுவின் தலைவர் நிக்கோலாய் கிளஷ்கோவ் நேற்று மாஸ்கோவில் ஒரு பேட்டியின்போது இத்தகவலைத் தெரிவித்தார்.

இந்தப்புள்ளி விவரப்படி ரஷ்ய நாட்டு மக்களின் பொருளாதார நிலைமை எவ்வளவு வளர்ச்சி அடைந்து இருக்கிறது என்பதையும், அந்த மக்களின் வாங்கும் சக்தி எவ்வளவு உயர்ந்திருக்கிறது என்பதையும் புரிந்துகொள்ள முடிகிறது என்றும் அவர் கூறினார்.

# தன்னிறைவுத் திட்டம்: கழக அரசுக்கு திமுக எம்.பி. பாராட்டு

உத்திரமேரூர், ஜூன் 17. கழக அரசின் தன்னிறைவுத்திட்டத்திற்கு தி மு.கழக எம் பி. வெங்கா பாராட்டுத் தெரிவித்துள்ளார் தன்னிறைவுத் திட்டத்தை மேலும் கிராமந் தோறும் கொண்டுவரவேண்டும் என்று அவர் கோரினார்

சித்தாம்பூர் ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த நெற்குணம் கிராமத்தில் தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் ரூ. 69 ஆயிரம் செலவில் பள்ளிக் கட்டிடம் கட்டப்பட்டுள்ளது.

புதிய கட்டிடத்தின் திறப்பு விழா நடைபெற்றது.

அச்சிறுப்பாக்கம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் சி. கணேசன் தலைமையில் விழா நடைபெற்றது.

பள்ளிக் கட்டிடத்தை உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு திறந்து வைத்தார்.

இந்த விழாவில் தி. மு. க. எம். பி வெங்கா கலந்து கொண்டு பேசினார்.

வெங்கா பேசுகையில் கூறியதாவது:

தமிழக அரசு தன்னிறைவுத் திட்டம் திட்டி செயல்படுத்தி வருகிறது.

இதை மேலும் கிராமம் தோறும் கொண்டுவர வேண்டும்.

மக்களுக்கு யார் நன்மை செய்தாலும் அவர்களைப் பாராட்ட வேண்டியது மிக அவசியம்.

இதன்படி தன்னிறைவுத் திட்டத்தை அமல்படுத்தி வரும் அமைச்சர் குழந்தை வேலுவைப் பாராட்டுகிறேன்.

இவ்வாறு வெங்கா பேசினார்.

## அமைச்சர் குழந்தைவேலு

விழாவில் அமைச்சர் குழந்தைவேலு கூறியதாவது;—

தமிழகத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் ஆட்சிக்கு முன்பு படித்தவர்கள் எண்ணிக்கை 41 சதவிகிதமாக இருந்தது. இடைப்போது இதில் 6 சதவிகிதம் உயர்வு ஏற்பட்டு 47 சதவிகிதமாக உயர்ந்துள்ளது.

கிராமங்களில் பெண்களுக்கென்று இந்தஆட்சியில் கழிப்பிடங்கள் கட்டப்பட்டு வருகின்றன.

47 ஆயிரம் கிராமங்களில் 27 ஆயிரம் கழிப்பிடங்கள் ரூ. 22.47 லட்சம் செலவில் கட்டப்பட்டு வருகிறது.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

30 வருடங்களாக

## உணவுப்பொருள் விலையில் மாற்றம் இல்லாத ரஷ்யா

மாஸ்கோ, ஜூன் 17— கடந்த 30 ஆண்டுகளாக ரஷ்ய நாட்டில் ரொட்டி அரிசி, எண்ணெய், சர்க்கரை மற்றும் காய்கறிமுதலிய உணவுப் பொருள்களின் விலையில் எந்தவிதமான மாற்றமும்ஏற்படாமல் விலைவாசிகள் ஒரே சீராக இருந்து வருகின்றன.

தவிர இறைச்சி, பால், பால்கட்டி, ஆகிய பொருள்களின் விலைவாசிகளும் கடந்த

(2-ம் பத்தி பார்க்க)

## கழக வெற்றிக்கு

# கையைக் காணிக்கை தர துணிந்த கழக செயல்வீரர் திருமணம்

தர்மபுரி, ஜூன் 17— கழக வெற்றிக்காக காளி கோயிலுக்கு கையைத் துண்டித்துத் தர முன்வந்த கழகச் செயல் வீரரின் திருமணத்தை அமைச்சர் குழந்தை வேலு நடத்தி வைத்தார்.

சட்டசபைத் தேர்தலில் தர்மபுரி தொகுதியில் போட்டியிட்ட கழக வேட்பாளர் அரங்கநாதனுக்கு ஆதரவாக பாடுபட்ட கழக செயல்வீரர் பொன்னன். அரங்கநாதன் வெற்றி பெற்றால் காளி கோயிலுக்கு தனது கையை காணிக்கைஆக்குவதாகக் கூறி இருந்தார். கழகம் வென்றது.

கை காணிக்கைகொடுக்கப்போன பொன்னனை கழகத் தோழர்களும் பொது மக்களும் தடுத்து அப்படிப்பட்ட மூடப்பழக்கம் வேண்டாம் என்று கூறி அவரை அழைத்து வந்து விட்டனர்.

தோழர் பொன்னனுக்கும் விஜயலட்சுமிக்கும் கடந்த 12ந் தேதி நல்லம்பள்ளி ஒன்றியத்தைச் சேர்ந்த மிட்டாரெட்டி ஹள்ளியில் திருமணம் நடந்தது. அமைச்சர் குழந்தைவேலு இத் திருமணத்தை நடத்தி வைத்தார். திருமணத்தில் குப்புசாமி எம் எல் ஏ அரங்கநாதன் எம் எல் ஏ ஆகியோர் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்தினார்கள்.

# எலக்ட்ரானிக் தேர்தல் முடிவை எதிர்த்து வழக்கு

கொச்சி, ஜூன் 17— கேரள தேர்தலில் பரூர் தொகுதியில் பரீட்சார்த்தமாக எலக்ட்ரானிக் முறையில் தேர்தல் நடந்தது தெரிந்ததே.

இந்தத் தேர்தலில் தோல்வி அடைந்த முன்னாள் சபாநாயகர் ஏ. சி. ஜோஸ் கேரள உயர்நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்துள்ளார்.

பரூர் தொகுதியில் ஜோஸ் 123 வாக்குகளில் தோல்வி அடைந்ததாக அறிவிக்கப்பட்டது.

எலக்ட்ரானிக் முறையில் தேர்தல் நடத்தப்பட்டு முடிவு அறிவிக்கப்பட்டதை எதிர்த்து அவர் வழக்குத் தொடர்ந்துள்ளார்.

# அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்



## தென்னாற்காடு மாவட்ட மாநாடு



### கடலூர் நகர்

**ஏ.கோவிந்தசாமி திடலில், மாணவர் பாலசுந்தரம் பந்தலில், மாணவர் ராசேந்திரன் அரங்கில்**

## ஜூன், 19 மகளிர் மாநாடு

காலை 9-30 மணி ஊர்வலம்

மாலை 4 மணி கலை நிகழ்ச்சி

கொடியேற்றுபவர் :

செல்வி பி. விஜயலட்சுமி எம்.எல்.ஏ.

வரவேற்புரை:

மாண்புமிகு **கோமதி சீனிவாசன்**

மாநாட்டுத் திறப்பாளர்:

டாக்டர் சத்தியவாணிமுத்து எம். பி.

மாநாட்டுத் தலைவர்:

திருமதி எம். ராஜலட்சுமி பி. எஸ்ஸி. பி. எல்.

**படத்திறப்பு:**

தந்தை பெரியார் படம்: திருமதி அலமேலு அப்பாதுரை

டாக்டர் தருமாம்பாள் படம் : புலவர் இந்திரகுமாரி

திருமதி. நாகம்மையார்படம்: திருமதி தேவகிபாண்டியன்

பாரதியார் படம் : திருமதி. பா. வளர்மதி

**சிறப்புரை:**

| | |
|---|---|
| திருமதி டி. சகுந்தலா | திருமதி கஸ்தூரிபாலன் |
| ,, வி. கே. சாந்தி | ,, லட்சுமி முத்து |
| ,, வி மாலா | ,, டாக்டர் மதனாபாய் எம். சி. |
| ,, பிரமீளா காந்தி எம். சி. | ,, வண்ணைஅனுராதா |
| ,, உடுமலை லட்சுமி | பவானிபழனியம்மாள் |
| ,, ரோஸ்மேரி | பழனி தனலட்சுமி |
| ,, மதுரை வேலம்மாள் | செல்வி பானுமதி |
| ,, ஆண்டாள் ரவூத் | மதுரை அன்னம்மாள் |

**தலைப்பு:**

சமுதாய சீர்திருத்தம்: திருமதி சுலோசனா சம்பத்

பெண்ணின் பெருமை: செல்வி ஜெயலலிதா

நிறைவு விழா சொற்பொழிவு:

மாண்புமிகு **ஆர். எம். வீ.**

இரவு 10-00 மணி: வெண்ணிற ஆடை நிர்மலாவின் "பாரதியாரின் கண்ணம்மா" நாட்டிய நாடகம்



## ஜூன், 20 அரசியல்மாநாடு

காலை 8 மணி: கலை நிகழ்ச்சி

காலை 9 மணி: வரவேற்புரை

திரு. டி. ஹீராசந்த் எம். பி. (மாவட்ட செயலாளர்)

மாநாட்டுத் திறப்பாளர்:

திரு. என். இராசாங்கம் (முன்னாள் அமைச்சர்)

மாநாட்டுத் தலைவர்: மாண்புமிகு **பண்ருட்டியார்**

**படத்திறப்பு:**

| | | |
|---|---|---|
| பேரறிஞர் அண்ணா படம்: | மாண்புமிகு | **ப. குழந்தைவேலு** |
| மாணவர் பாலசுந்தரம் படம்: | மாண்புமிகு | **எஸ். டி. எஸ்.** |
| ஏ. கோவிந்தசாமி படம்: | மாண்புமிகு | **எஸ். இராகவானந்தம்** |
| மாணவர் ராசேந்திரன் படம்: | திரு | க. லியாகத் அலிகான் |
| சிந்தனை சிற்பி சி.பி சிற்றரசு படம் : | ,, | திருவை அண்ணாமலை |
| பாரதிதாசன் படம்: | ,, | புலவர் அறிவுடைநம்பி |

**தலைப்பு**

மாநிலங்களுக்கு அதிக அதிகாரம்: **ஆலடி அருணா**

மொழிப் போர்: நேற்று-இன்று-நாளை மாண்புமிகு **கா. காளிமுத்து**

மாலை 4-00 மணி கலை நிகழ்ச்சிகள்

மாலை 6-00 மணி **சிறப்புரை:**

மாண்புமிகு

**டாக்டர் நாவலர்**

,, **சி. பொன்னையன்**

,, **கே. ராசாமுகமது**

,, **எஸ்.என்.ராசேந்திரன்**

,, **புலமைப்பித்தன்**

,, **இரா.மோகனரங்கம்**

கழகப் பொதுச் செயலாளர் திருமிகு **ப. உ. ச.**

மாண்புமிகு டாக்டர் **எச். வி. அண்டே**

,, **எஸ்.முத்துசாமி**

,, **எம். விசயசாரதி**

,, **பி.எச்.பாண்டியன்**

,, பாவலர் **மா.முத்துசாமி**

| | |
|---|---|
| திரு. ஈ. வெ. அ. வள்ளிமுத்து | திரு மதுரை முத்தண்ணன் |
| ,, முனுஆதி | ,, பி முசிறிப்புத்தன் |
| ,, அனகாபுத்தூர் ராமலிங்கம் | ,, திருச்சி ஆர். சௌந்தரராசன் |
| ,, எஸ். எஸ் ராசேந்திரன் | ,, இரா. மணிமாறன் |
| ,, துரை. கோவிந்தராசன் | ,, வை. பெருமாள் |
| ,, ஏ. கே. அரங்கநாதன் | ,, ஜேப்பியார் |
| ,, ஐசரிவேலன் | ,, டி. கே. சீனிவாசன் |
| | ,, இரா சனார்த்தனம் |
| | ,, அடியார் |

இரவு 10 மணி: செல்வி ஹேமா சவுத்ரியின் ஆந்திர நடனங்கள்

      

இரண்டுநாள் நிகழ்ச்சிகளிலும் மாண்புமிகு தமிழக முதல்வர் **புரட்சித்தலைவர்** அவர்கள் கலந்துகொள்வார்